[29th October 1958

*Uplift of Harijans*

* 680 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) ஹரிஜன முன்னேற்றத்திற்காக தொண்டாற்றிய பிரமுகர்களுக்குப் பரிசு அளிப்பதற்காக 1957–58-ல் ஒதுக்கப்பட்ட தொகையிலிருந்து ஒவ்வொரு ஜில்லாவிலும் எத்தனை பிரமுகர்களுக்குப் பரிசுகள் கொடுக்கப்பட்டன ?

(ஆ) 1958–59-ல் இவ்வித பரிசுகள் கொடுப்பதற்காக ஒதுக்கப்பட்டிருக்கும் தொகை எவ்வளவு ?

THE HON. SRI P. KAKKAN : (*a*) 8 persons.

(*b*) Rs. 6,500.

SRI P. G. MANICKAM : பரிசுக்கு உரியவர்களைத் தேர்ந்தெடுக்கும் விஷயத்தில், கீழ் அதிகாரிகளால் தேர்ந்தெடுக்கப்படும் நபர்களைக்கொண்ட பட்டியலை ஜில்லாக் கலெக்டர்கள் அப்படியே அரசாங்கத்திற்கு அனுப்புகிறார்கள். இதன் காரணமாக சரியான முடிவுகள் (தீர்ப்புகள்) ஏற்படாமலிருப்பதால், ஜில்லாக் கலெக்டர்கள் அனுப்பும் ஜாபிதாவை மாநில ஹரிஜன நல இலாகாக் கமிட்டியின் மூலம் மீண்டும் பரிசீலனை செய்ய அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI P. KAKKAN : அந்த முறையில் மறு பரிசீலனை செய்யப்படுவதில்லை. இருந்தாலும், கலெக்டர்களின் சிபாரிசுகளை ஹரிஜன நல இலாகா டைரெக்டரும், சம்பந்தப்பட்ட மந்திரியும் பரிசீலனை செய்த பிறகுதான் யார் யாருக்குப் பரிசுகள் கொடுக்க வேண்டுமென்று முடிவு செய்யப்படுகிறது.

SRI M. KALYANASUNDARAM : எந்த அடிப்படையில் பரிசுக்குரியவர்கள் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள் ? பரிசுக்குரியவர்கள் யார் யார் என்பதை முடிவாகத் தீர்மானிப்பது யார் ? அவ்வாறு முடிவாகத் தீர்மானிப்பது, சர்க்காரா அல்லது ஜில்லா அதிகாரிகளா ?

THE HON. SRI P. KAKKAN : முடிவாகத் தீர்மானிப்பது சர்க்கார் தான். யார் யார் மிக அதிகமாக ஹரிஜன சேவை செய்திருக்கிறார்கள் என்று கவனித்துத்தான் முடிவு செய்யப்படும்.

SRI S. NAGARAJA MONIGAR : மாநிலம் பூராவிலும் உள்ள ஹரிஜன சேவை செய்பவர்களை ஊக்குவிப்பதற்காக இந்தப் பரிசுகள் ஜில்லாவாரியாகக் கொடுக்கப்படுகின்றன என்பதை நான் வரவேற்கிறேன். ஆனால், சென்ற வருஷம் சேலத்தில் ஏழு பரிசுகள் ஒரே பகுதியில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவ்வாறு செய்வது ஜில்லாவின் பல பாகங்களில் உள்ளவர்களையும் ஊக்குவிப்பதாக இல்லை. ஆகையால், இந்தத் திட்டத்தில் சர்க்காரின் கொள்கையை கனம் அமைச்சர் தெளிவுபடுத்துவாரா ?

THE HON. SRI P. KAKKAN : இந்தப் பரிசுகளை தாலூகாவாரியாகக் கொடுக்கவில்லை. ஆங்காங்கே அதிகமாக ஹரிஜன சேவை செய்துள்ளவர்களுக்கு பரிசுகள் கொடுக்கப்படுகின்றன.

SRI M. JAGANNATHAN : இந்தப் பரிசுகள் எந்த ரூபத்தில் கொடுக்கப்படுகின்றன ? ஒவ்வொரு பரிசின் மதிப்பு எவ்வளவு ?

THE HON. SRI. P. KAKKAN : பரிசுகள் கொடுக்கப்படுகின்றன. முதல் பரிசின் மதிப்பு ரூ. 100. இரண்டாவது பரிசின் மதிப்பு ரூ. 50.

SRIMATHI T. N. ANANDANAYAKI : ஹரிஜன சேவைக்காகப் பதக்கம் பெற்றவர்கள் பெண்கள் எத்தனை பேர் ?

THE HON. SRI P. KAKKAN : இதற்கு கனம் அங்கத்தினர் தனிக் கேள்வி போடவேண்டும்.

29th October 1958]

**Sri C. NATARAJA ODAYAR :** இந்தப் பரிசுகள் காங்கிரஸ் கட்சியைச் சேர்த்தவர்களுக்கே வழங்கப்படுகின்றன. வேறு கட்சிகளைச் சேர்ந்த ஹரிஜனத் தொண்டர்களுக்கும் இந்தப் பரிசுகள் வழங்கப்படுமா ?

**The Hon. Sri P. KAKKAN :** இந்தப் பரிசுகளை அரசாங்கத்தார், கட்சி வேற்றுமை பாராட்டாமல் கொடுக்கிறார்கள். மிகவும் ஹரிஜன சேவை செய்தவர்கள் காங்கிரஸ்காரரல்லாதவர்களாக இருந்தால் அவர்களுக்கும் பரிசுகள் கொடுக்கப்படும்.

**Sri A. GOVINDASAMY :** இந்தப் பரிசுகள் கட்சி வேற்றுமை பாராட்டப்படாமல் அளிக்கப்படுவதாக கனம் அமைச்சர் சொன்னார். ஆனால், இந்த ஆண்டு தென்னாற்காடு மாவட்டத்தில் அத்தனை பரிசுகளும் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்களுக்குத்தான் கொடுக்கப்பட்டன என்பது கனம் அமைச்சருக்குத் தெரியுமா ?

**The Hon. Sri P. KAKKAN :** இந்தப் பரிசுகள் கட்சி வேற்றுமை பாராட்டப்படாமல் கொடுக்கப்படுகின்றன என்று நான் முன்பே சொன்னேன். தென்னாற்காடு மாவட்டத்தில் பிரஸ்தாப நபர்களுக்கு பரிசுகள் கொடுக்கப்பட்டதற்குக் காரணம், அவர்கள் மிக அதிகமாக ஹரிஜன சேவை செய்திருந்ததுதானே தவிர அவர்கள் காங்கிரஸ்காரர்களாக இருந்தது அல்ல.

*Bifurcation of South Arcot district*

* 681 *Q.*—**Sri M. JAGANNATHAN :** Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) whether the Government have taken any action so far to implement the scheme for the bifurcation of the South Arcot district as contemplated in the White Paper on Local Administration Reforms; and

(*b*) if so, where the headquarters of the new district is proposed to be located?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** (*a*) Not yet, Sir.

(*b*) Does not arise. The question will be decided in consultation with the district M.L.As. with due regard to administrative requirements.

**Sri M. JAGANNATHAN :** If and when the question is taken up for consideration, will the Government consider the desirability of locating the district headquarters at Tindivanam?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** Sir, I have not yet applied my mind to that aspect. When the question arises, certainly the hon. Member will be consulted.

**Srimathi T. N. ANANDANAYAKI :** May I know when it is likely to be considered and how long it will take?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** When the occasion arises.

**Sri A. GOVINDASAMY :** தென்னாற்காடு மாவட்டத்தை இரண்டாகப் பிரிக்கும் யோசனை இப்போது சர்க்காரால் கைவிடப்பட்டிருப்பதற்குக் காரணம் என்ன ? அந்த மாவட்டத்தை இரண்டாகப் பிரிப்பதற்கு முன் அறிகுறியாக அங்கே இரண்டு கல்வி இலாகா அதிகாரிகளும், இரண்டு